---

**நூலின் பெயர்:** குற்றால வலி(ழி) | **ஆசிரியர்** : கருவெளி ராச.மகேந்திரன் | **விலை** : 23 வது பக்கத்தை பார்க்கவும் | **வகை** : இபுத்தகம் | முதல் பதிப்பு : டிசம்பர், 2018

---

**Book Name** : Kuttrala Vali(zhi) | **Author** : Karuveli RaSa. Mahendran | **M.R.P.** : Check Page Number 23 | **Category:** EBook | First Edition : Dec, 2018

---

**வடிவமைப்பு மற்றும் வெளியீடு :**

ரா.மகேந்திரன், கருவெளி கலையகம், தேனி -625531

karuveli.mahendran@gmail.com | **94455 28556** | **https://www.karuveli.wordpress.com**

## நூல் பற்றி..

*நிகழும் அத்தனையையும் எழுதி என்னால் நூலாக்கிவிட இயலாது. அதற்கான காலம் என் கையில் இருப்பதாய் எனக்குத் தோன்றவும் இல்லை. ஆனால் சில நிகழ்வுகளை உறுதியாக எழுதிவிட வேண்டும் என்ற உந்துதலை அந்த நிகழ்வுகளே தந்து விடுகின்றன. இந்தக் கதையின் தலைப்பே உங்களுக்கு இக்கதை பற்றிய சிறு கற்பனையை தூண்டி விட்டிருக்கும். அந்தக் கற்பனைக்கு முற்றுப் புள்ளி வைத்துவிடும் ஒரு உண்மைச் சம்பவமே இங்கு சிறுகதையாக உங்களிடம் பகிரப் போகிறேன். எழுதத் துவங்குவதற்கு முன்பே இதயத்தை உறையச் செய்யும் ஒரு அனுபவமாக இதோ என்னுள் அந்த அனுபவம் பயணித்துக் கொண்டே இருக்கிறது. எனக்கு மட்டுமல்ல அந்த நிகழ்விலிருந்த அனைவருக்கும் இந்த நிகழ்வு நெஞ்சை விட்டு நீங்க நீண்ட நாட்களாகும்.*

*(சு)வாசித்துவிட்டு உங்களுக்குள் சிந்தியுங்கள், உறவுகளுடனும் நட்புடனும் சேர்ந்து சிந்தியுங்கள். மனிதத்தை அடுத்த தளத்திற்கு எடுத்துச் செல்ல என்ன செய்வதென்று யோசியுங்கள். உங்கள் கருத்துக்களை விமர்சனங்களை எனக்கு எழுதி அனுப்புங்கள். இந்த சிறுகதையை வாசித்து விட்டு உலகின் ஏதேனும் ஒரு மூலையில் ஒருவரது மூளையின் மூலையில் மாற்றங்கள் குறித்து சிந்தித்தால் இதனை எழுதியதன் பயன் கிட்டி விட்டதாகவே நம்புகிறேன். அதனை நீங்களும் நம்பினால் பலரிடமும் பகிர்ந்து கொள்ளுங்கள்.*

*என்னைத் தொடர்பு கொள்ள* karuveli.mahendran@gmail.com *என்ற மின்னஞ்சல் முகவரியைப் பயன்படுத்தவும்.*

*எனது படைப்புகளை தொடர்ந்து பெற விரும்பினால் உங்கள் விருப்பம் குறித்து அந்த மின்னஞ்சலில் குறிப்பிடவும். படைப்புகள் மின்னஞ்சலில் உங்களை வந்து சேர வகை செய்கிறேன்.*

*தொடர்ந்து (சு)வாசியுங்கள்..*

*அன்புடன் । "கருவெளி" ராச.மகேந்திரன்*

*08 - டிசம்பர் -2018*

***“ஒவ்வொரு விடியலும் நமக்கு புது நம்பிக்கையை நாளும் கொண்டு வருகிறது”.*** இந்த சொற்றொடர் வெற்று நம்பிக்கை மட்டுமல்ல, அது உண்மையும் கூட. ஒவ்வொரு விடியலிலும், ஒவ்வொரு அதிகாலை கண் விழிப்பிலும், *“விழிப்போம்!” என்ற நம்பிக்கையோடு கண் மூடிய நம்பிக்கை* மீண்டும் விழித்தெழுகிறது. அத்தகைய நம்பிக்கையோடு தான் மேற்குத் தொடர்ச்சி மலையின் அடிவாரத்தில் மலைகள் சூழ்ந்த மிக உயர்ந்த மரங்கள் நிறைந்த வனத்தை ஒத்த பகுதியில் அமைந்திருந்த அந்த இயற்கை மருத்துவ ஆராய்ச்சி மையத்தின் நோயாளிகள் தங்குமறையிலிருந்து கண் விழித்தேன். நான் இங்கு வந்து சில நாட்கள் கடந்தோடி விட்டன. கண் விழித்த போது என்னுடன் அறையில் தங்கியிருந்த தோழரும் எந்தவித பிரச்சனையுமின்றி அறைக்குத் திரும்பி இருந்தது எனக்கு நிம்மதியைத் தந்தது.

“**விடியலில் விழிப்போம்**” என்று அனைவரும் நம்பலாம் அதற்கு எந்தத் தடையுமில்லை. ஆனால் அந்த நம்பிக்கை அனைவருக்கும் உறுதி செய்யப்படுவதில்லை என்பதும் சத்தியமே. என் அறைத் தோழர் எந்தவித பிரச்சனையுமின்றி திரும்பி இருந்ததால், நேற்றைய எனது மன அச்சம் பொய்த்துப் போனதென்ற தைரியத்துடன், புது நம்பிக்கையுடன் அன்றைய தினத்தை புத்தம் புது நம்பிக்கையுடன் துவங்கினேன். இயற்கையோடு இயைந்த வாழ்வு, இயற்கையை பற்றி அறிய நமக்கு பெரும் வாய்ப்பை அமைத்துக் கொடுக்கிறது. நம்மில் பலர் அத்தகைய வாய்ப்பே கிடைக்காமல் நம் வாழ்வை முடித்துக் கொள்கிறோம். அத்தகைய அவல நிலை எனக்கு வாய்க்காதது மிகவும் திருப்திகரமானதே. நாம் இயற்கையை நோக்கி ஓரடி வைத்தால் இயற்கை நம்மை நோக்கி ஓடோடி வந்து கொண்டே இருக்கிறது என்பதே என் அனுபவம்.

மருந்துகளுக்கு முன்னே.. மாத்திரைகளுக்கு முன்னே, மூலிகைகளுக்கு முன்னே. உணவே மருந்தாக, இயற்கை உணவே உணவாக இருந்ததாக நம்பி இயங்கும் இயற்கை மருத்துவம் ஓரிரு தினங்களிலேயே, அச்சிந்தனைகளை உண்மையென்று நிரூபித்தபடி நாட்களை நடத்திக் கொண்டிருக்க, புதிதாய் ஒரு நம்பிக்கை இன்றும் துளிர் விட யோகா வகுப்பிற்குத் தயாராகிக் கொண்டிருந்தேன். நாட்டுச் சர்க்கரையுடன் தயாராயிருக்கும் சுக்கு மல்லி கசாயம் அருந்திய பின்னே யோகா வகுப்பிற்கு செல்ல இருவரும் தயாராகி அறையை விட்டு வெளியேறினோம். நேற்றைய பயணம் பற்றிய தகவல்கள் எதையும் என் அறையிலிருந்த இயன்முறை மருத்துவரிடம் கேட்கவில்லை. அதற்கான காரணம் எனக்கு மட்டுமே தெரிந்தது. ஆனாலும், நடுநிசிக்கு முன்பாகவே திரும்பி விட்டதாகவும் குற்றாலப் பயணம் சிறப்பாக இருந்ததாகவும் அவர் கூற தலையசைத்தபடியே உணவு கிடைக்கும் அறையை நோக்கி நடந்தோம்.

காடு, எங்கும் செடி கொடிகள், விட்டு விட்டுப் பெய்யும் மழை, கொசுக்களுக்கு பஞ்சமில்லை என்பதனை உறுதி செய்தாலும் ஓய்வெடுக்கும் அறைக்குள் கொசுக்கள் வராமல் கொசுவலைகள் சன்னல்களை பாதுகாத்து நல்ல ஓய்வை உறுதி செய்திருந்ததால் ஐந்து மணிக்கு எழுவது அத்தனை கடினமானதாக இல்லை. பள்ளியில் படிக்கும் காலங்களிலும் மும்பையில் பணி புரிந்த காலங்களிலும் என்னோடு இருந்த, அங்குமிங்குமாக என் வாழ்நாளில் இழந்துவிட்ட அதிகாலை எழும் பழக்கத்தை திரும்பப் பெற்று விட்ட நம்பிக்கை ஓரிரு நாட்களில் எனக்குள் விதைக்கப் பட்டு விட்டதோடு துளிர் விட்டு ஓங்கி வளர்ந்திருக்கும் மரங்கள் போல வளரவும் துவங்கி விட்டது. இது எனக்கு மிகப்பெரிய நற்செய்தி, வரும் புத்தாண்டுக்கான நற்செய்தி.

மருத்துவர் மற்றும் மேலாளர் அறையைக் கடக்கும் போது நேற்றைய நிகழ்வு மெதுவாக எனக்குள் மீண்டும் பயத்தை கொண்டு வந்து நிறுத்தியது. இதயத் துடிப்பு கொஞ்சம் விட்டு விட்டு தடம்மாறி தொடர்ந்தது. உலகில் முதல் தலை அறுவைச் சிகிச்சை செய்தவராக நம்பப்படும் "அகத்தியரும்" அவரது சீடர் "தேரையாரும்" அறுவைச் சிகிச்சை செய்ததாக கூறப்படும் "தோரண மலை" ஏறித் திரும்பிய நேற்றைய நிகழ்வு பல அனுபவங்களை கொடுத்திருந்த போதும் இரண்டு முக்கிய விசயங்களை உறுதி செய்திருந்தது. அவை, உடல் மீண்டும் தன் சிறந்த நிலைக்குத் திரும்பிக் கொண்டிருக்கிறது, இயற்கை வாழ்வியல் ஓரிரு தினங்களில் மீண்டும் என்னை ஈராண்டுகளுக்கு முன்னே இருந்த உடல் நிலைக்கு கொண்டு சென்று விட்டது என்பதே.

***"சைக்கோ சோமடிக்"*** எனும் ஆங்கில வார்த்தையை நம்மில் சிலர் கேள்விப்பட்டிருக்கக் கூடும். மிகச் சிலர் அனுபவப் பூர்வமாக அவ்வார்த்தையின் அர்த்தத்தை அறிந்து வைத்திருக்கக் கூடும். அந்த வார்த்தை பற்றிய ஆராய்ச்சிக்குள் செல்ல விரும்பாவிட்டாலும் அதற்கான ஓரளவு எனக்குத் தெரிந்த அர்த்தமான "சிந்தனை ஓட்டத்தில் ஏற்படும் மாற்றங்களால் உடலில் ஏற்படும் அல்லது ஏற்பட்டிருப்பதாய் தோன்றும் நோய்கள்" எனக்கு நினைவுக்கு வரவே; அதிலிருந்து மீளத்தான் இந்த முயற்சி, அதனை நேற்றைய மலையேறிய நிகழ்வு எனக்கு வாரி வழங்கி இருந்தது. ஆனாலும், அதற்கு நேர் எதிர்மறையான தகவல் ஒன்றும் என்னை இந்த வார்த்தையை நினைக்க வைத்ததென்றால் அது பொய்யாகாது.

இந்த இயற்கை உணவு போதுமானதாய் இருக்குமா? என்ற வினாவிற்கு பதிலளிக்கும் விதமாக "மலையேற்ற நிகழ்வு" இருந்தது. சில மாதங்களில் மீட்டெடுத்திருந்த மன நிலையை ஒரே நிகழ்வு அல்லது அது பற்றிய தகவல் மாற்றி அமைத்து விடும். அதனால் வாழ்நாளில் எத்தனை நாட்கள் நம்மை விட்டு தொலைந்து போய் விடுகிறது. இதை நினைத்துப் பார்த்தால் நாம் ஒரு போதும் அநாவசிய நிகழ்வுகளை நிகழச் செய்யவோ அத்தகைய நிகழ்வுகள் பற்றிய தகவல்களை பரப்புரை செய்யவோ ஒரு முறைக்குப் பலமுறை யோசிப்போம். ஆனால், இன்றைய அவசர வாழ்வியல் முறையில் நமது யோசனைக்கான நேரம் தொலைந்து போய்விட்டதென்ற பொய்யோடு… களவாடப்பட்டு விட்டது அல்லது தானே திருட்டுக் கொடுக்கிறோம் என்ற உண்மையும் ஒரு சேர என் உள்ளத்தில் தோன்றியபடியே இருக்க, நான் மீண்டும் நேற்றைய தினத்திற்குப் பயணித்தேன், என் உடல் இன்றைய தினத்தில் நிலையாமலிருக்க.

சமைக்காமல் இயற்கை உணவை உட்கொண்டிருக்கும் இச்சமயத்தில் "அவுலும், மக்காச்சோளமும்" மூலப் பொருளாகக் கொண்டு தயாரிக்கப்படும் அந்த ஒரு வேளை உணவுக்கு மட்டும் அடிமை நாக்குத் தேடி ஓடும் அந்த பதினொரு மணிக்கு அனைவரும் உணவகத்தை சரியாக வந்தடைத்திருப்பார்கள். ஆனால், இன்று அனைவரும் தங்கள் உணவு நேரத்திற்கு சரியாக வந்திருப்பதற்கு அதைத் தவிர இன்னொரு காரணமும் இருந்தது. ஆம், அனைவரும் குற்றால அருவி சென்று வரவிருப்பதாக திட்டமிட்டிருந்தார்கள். எனக்கு மட்டும் ஏனோ அதில் நாட்டம் செல்லவில்லை. ஏறக்குறைய பெருவாரியான நபர்கள் செல்வதென்று முடிவானது. நான் வரவில்லை என்பதை ஏற்க மறுத்தவர்கள் சம்மதம் வாங்கிவிடும் நோக்குடன் முயற்சித்தும் பார்த்தார்கள்.

இதற்கிடையில் இன்னொரு குழுவும் நேர மேலாண்மையை சொல்லி தனியே செல்வதெனத் திட்டமிட்டது. எனக்கு, ஏனோ… ஆம் என்ற பதில் சொல்ல மனம் வரவே இல்லை. அதற்கு காரணங்கள் எதுவாக இருந்தாலும் அதுபற்றி எந்தக் கவலையும் கொள்ளத் தேவையில்லை. ஆனால் அதையும் தாண்டிய ஒரு அச்சம் எனக்குள்ளே நிலவியது. அதனை அனைவரிடமும் பரப்ப மனமின்றி வரவில்லை என்ற பதிலை மட்டும் வழங்கி விட்டுத் திரும்பினேன். மிகுந்த குதுகூலத்துடன் மதிய நேரம் கடந்து ஒரு குழு புறப்பட்டுச் சென்றது. இயற்கையை கண்டு இரசிக்கும் வாய்ப்பு கிட்டும் போதெல்லாம் நாம் அனைவரும் இயற்கையின் குழந்தைகளாகி விடுகிறோம். அப்போது தோன்றும் மகிழ்ச்சியை வார்த்தைகளுக்குள் கொண்டு வந்திட இயலாது.

எனக்குள் குடி கொண்டிருந்த அச்சத்தை மறைக்க முயன்ற போது வழக்கம் போல் மௌனம் வந்து ஆக்கிரமித்துக் கொண்டது. அன்றைய தினத்திற்கான சிகிச்சைகளை தொடர்ந்த படியே மௌனித்திருந்தேன். அவர்கள் புறப்பட்டுச் சென்று அரைமணி நேரம் சென்றிருக்கக் கூடும், அந்த நொடியும், நான் மேலாளர் அறையை கடக்கும் நொடியும் எனது மன அச்சத்திற்கான முதல் சமிக்ஞையை என் கண் முன்னே நிறுத்தியது. பதட்டமில்லா போக்கு கொண்ட மேலாளரும் சிறிது பதட்டத்துடன் தன் அறையை விட்டு வெளியே வந்து, “யாரும் அச்சம் கொள்ள வேண்டாம், நான் இன்னொரு வண்டியை வரச் சொல்கிறேன், அதில் நீங்கள் குற்றாலம் செல்லலாம், இந்த வண்டியை காவல் நிலையத்திற்கு அவர்கள் எடுத்துச் செல்வார்கள்” இந்த வார்த்தைகள் குற்றாலம் செல்லாமல் அங்கிருந்த அனைவரிடமும் பெரும் பதட்டத்தையும் அச்சத்தையும் கிளப்பி விட்டது. அங்கிருந்தோரை “ஒன்றுமில்லை ஒன்றுமில்லை” என்று சமாதானம் சொல்லி விட்டு வாடகை வண்டியின் முதலாளிக்கு அழைத்தார் மேலாளர்.

என் இதயம் துடித்து நின்றது. ஆனால் என்ன பிரச்சனை என்று கேட்டு அங்கு பதட்டத்தை நிறைக்க விரும்பாமல், அவரது வார்த்தைகளைக் கவனித்தேன். புதிய ஓட்டுநரையும் இன்னொரு வாகனத்தையும் அனுப்பி வைக்குமாறு வாகனத்தின் முதலாளிக்கு செய்தியை சொல்லி முடிக்கையில் ஒருவாராக என்ன நடந்திருக்கும் என என்னால் யூகிக்க முடிந்தது. புரிந்து விட்டதென்றபடி, தலையசைத்துக் கொண்டு அங்கிருந்து உணவு பரிமாறப்படும் இடத்திற்குள் நுழைந்தேன்.

பயிற்சி மருதுவர்களாய் அங்கு சிறப்பாக பணியாற்றி வரும் மருத்துவர்கள் இருவர், என்ன நடந்ததென்று அறியத் துடிக்கும் பாட்டியை எனக்கு விசயம் தெரியுமென அழைத்து வந்து என் முன்னே நிறுத்தியது எனக்குள் பேரச்சத்தை மேலும் பரப்பியது. அதை அவர்களிடமும் பரப்பாமல் இருக்க “பொய்மையும் வாய்மை இடத்து” என்ற வள்ளுவரின் குரலை நினைத்து எனது யூகத்தினை அவர்களிடம் சொல்லாமல் தவிர்த்து அவ்விடம் விட்டு நகர்ந்தேன். அந்த மூதாட்டியும் இரு மருத்துவர்களும் சிறிது ஏமாற்றமடைந்திருக்கக் கூடும், ஆனாலும் உறுதி செய்யாமல் அந்த தகவலை பரப்பிட எனக்கு மனமில்லை, ஆகையால் உறுதியாகும் வரை காத்திருப்பதென நினைத்தபடி என்னை நானே சமாதானம் செய்து கொண்டேன்.

தனியே செல்லத் திட்டமிட்டிருந்த குழுவிடம் நான் வரவில்லை என்பதனை உறுதி செய்தேன். இரவு நேரத்திலும் குற்றாலத்தில் குளிக்க இயலும் என்பது எனக்குப் புதிய தகவல். ஆனால் அதனை விட மோசமான தகவல் ஒன்று வந்து சேருமென்ற எந்த அவநம்பிக்கையின்றி கண்மூடிய நானும் நடுநிசிக்கு முன்பே திரும்பிய என் அறைத் தோழரும் சுக்கு மல்லி கசாயம் குடிக்க, நடந்து அவ்வறையை அடைந்தோம். யாரிடமும் எதுவும் கேட்க கூடாதென்று நினைத்திருந்த நான் கேட்டது..

“நல்ல வேளை சார், நேத்து நீங்க வரல” சொன்னவர் நேற்று குற்றாலம் சென்று திரும்பியவர்.

ஏன் சார்? என்ன ஆச்சு? என்று என் வார்த்தைகளை முடிப்பதற்குள்

நேற்று நாங்க குற்றாலம் போன வேன், ஆக்ஸிடெண்ட் ஆயிடுச்சு சார் (விபத்திற்குள்ளாயிடுச்சு).

சந்தோசமா, குற்றால அருவியை நோக்கிப் போயிட்டிருந்தோம், இன்னும் இரண்டு கிலோ மீட்டர் தான் இருக்கும்னு நினைக்கிறேன். “டமால்” என்ற சத்தம். நாங்க கூட டயர் வெடிச்சிருச்சுனு நினைச்சோம். ஆனா.. டிரைவர் வண்டிய விட்டு இறங்கிப் போகவும் தான் பார்க்கிறோம். டுவீலர் ல (இரு சக்கர வாகனம்) வந்த ஒருத்தன் எங்க வண்டியில மோதி ரோட்டோட (சாலையோட) மறுபக்கத்தில் கிடக்கிறான். அவன் வண்டி நடு ரோட்ல கெடக்குது.

அவரோடு சென்றிருந்த அவரது நண்பர், அவசரமாய் வந்து “சார், அவனுக்கு வயசு ரெம்ப குறைவாகத் தான் இருக்கும்”, இருபத்தி எட்டிலிருந்து முப்பதுக்குள் தான் இருக்கும். நினைச்சுப் பார்க்கவே பாவமா இருந்திச்சு. நாங்க 108க்கு கூப்பிட்டோம், குற்றாலத்தில் வாகனம் ஏதுமில்லாததால் பதினைந்து நிமிடத்திற்கு மேலாயிற்று, அவசர சிகிச்சை கொடுக்க இந்த கால தாமதம் ஏற்படாமலிருந்தால்.. சொல்லி முடிக்காமல் மௌனமானார் அவரது மௌனம் எனது இதயத்துடிப்பை அதிகப்படுத்தியது. மௌனம் துறந்தவர் சொன்னார், விபத்து பகுதியில் இருந்த மருத்துவர் ஒருவர் முதலுதவி செய்த போது கூட அந்த நபர் உயிரோடு தான் இருந்தார். 108 வண்டியில் ஏற்றும் போது கூட அவர் உயிரோடு தான் இருந்தார். நாங்கள் புதிதாய் வந்த வண்டியிலேறி அமைதியில்லா மனதோடு குற்றாலம் நோக்கிப் புறப்பட்டோம்.

அனைவரும் குற்றாலீஸ்வரரிடமும் அனைத்துக் கடவுளிடம் வேண்டிக் கொண்டோம். சிறிது நேரங்கழித்து வாகனத்தின் முதலாளிக்கு அழைத்தப் பேசிய பிறகு தான் தெரிந்தது மருத்துவமனையில் அவர் இறந்து விட்டதாக. அவர் வார்த்தைகளை முடிப்பதற்குள்.

நேற்று குற்றாலம் சென்றிருந்த இன்னொரு சென்னைவாசியான பெண் துவங்கினார், " சார், நானும் என் அப்பாவும் நம்ம டிரைவர் சீட்டுக்குப் பின்னாடி சீட்[1]டில் தான் உட்காந்திருந்தோம், நல்ல வேளை நம்ம டிரைவர் வண்டிய முடிஞ்சளவு வளைச்சு நிறுத்தினாரு, இல்லைனா, நாங்க எல்லாரும் பள்ளத்தில போயி கவிழ்ந்திருப்போம். திடீர்னு பிரேக் போட்டதனால, வயசான அப்பா சீட்டிலிருந்து முன்னோக்கி வந்து கீழே விழுந்து அவருக்கு அடி பட்டு விட்டது. அவரைக் கவனித்துக் கொண்டிருக்கையில் சுற்றி என்ன நடக்குதுனே நான் கவனிக்க முடியல. அதிலிருந்து சுதாரிச்சு திரும்பிப் பார்த்தா.. தூரத்தில.. அவரு அடிபட்டு கிடக்கிறாரு.. ரோட்டோட நடுவுல அவரோட பைக்[2] கிடக்குது. எனக்கு போயி பாக்கவே பயமா இருந்துச்சு. அவரு கொஞ்ச வயசுனு சொன்னாங்க. நினைச்சுப் பாருங்க, அவரோட மனைவி வாழ்க்கை என்னவாகும்? அவங்க அம்மா, அப்பாவோட நிலைமை என்னவாகும்? குழந்தைகள் நிலைமை என்னவாகும்? அவரோட மனைவியையோ அம்மாவையோ அப்பத்தான் ஊருக்கு அனுப்பிட்டு குற்றாலத்துக்கு நண்பர்களோட வந்ததா சொன்னாங்க. இப்பக் கூட அவரு நண்பரக் கூப்பிட வண்டியில போறதா சொன்னாங்க. மன அமைதிக்காகவும், உடல் நல முன்னேற்றத்திற்காகவும் வந்த ஓரிடத்தில் நடந்த இந்த நிகழ்வை எப்படி என் நினைவிலிருந்து அழிக்கப் போறேன்னு தெரியல சார்..

---

[1] இருக்கை

[2] இருசக்கர வாகனம்

எனது இதயம் இயல்பு நிலைக்குத் திரும்புவதற்கான வாய்ப்பைக் கொடுக்காமலிருந்தது ஒவ்வொருவரும் சொல்லும் வார்த்தைகள். இந்த ஆண்டின் ஆரம்பத்தில் நான் உயிர் பிழைத்ததே பெரும் அதிர்ஷ்டம் என்றிருக்கையில் நேற்றுச் சென்றிருந்தால் இப்படி ஒரு பிரச்சனையில் சிக்கி இருப்போனோ என்று நினைக்கையில் வயிற்றுக்குள் ஏதோ செய்தது.

முன்பு விளக்கிக் கொண்டிருந்த லூ, எங்களால் நிம்மதியாக குற்றாலத்தில் நேரத்தை செலவிடவே இயலவில்லை. அவர் சொல்லிக் கொண்டிருக்கையிலேயே திருச்சியிலிருந்து வந்திருந்த தம்பதிகள் சொன்னார்கள் நாங்கள் குற்றாலத்தில் குளிக்கவே இல்லை. நாங்கள் பல கடவுளை வேண்டியும் அந்தப் பையன் உயிர் பிழைக்காமல் போனது மிகுந்த மன அழுத்தத்தையும் வலியையும் ஏற்படுத்தி விட்டதென்றார்கள்.

நான் குற்றாலம் சென்றிருந்தால் கூட இந்த நிகழ்வைப் பற்றி எனக்கு ஒரே ஒரு பார்வை, என்னோட பார்வை மட்டும் தான் இருந்திருக்கும். ஆனால், தற்சமயம் அனைவரின் எண்ண அலைகளும் எனக்குள் ஓயாது மோதிக் கொண்டிருந்தன. ஒரு இறப்பு எத்தனை நபர்களின் வாழ்வை பாதித்து விடுகிறது. அதுவும் இது போன்ற அகால மரணங்கள் பெறும் பாதிப்பை ஏற்படுத்தி விடுகின்றன. “ரெட் ஹில்ஸ்” என்ற பகுதியில் நான் குடியேறியிருந்த காலத்தில் மாதம் குறைந்தது இரண்டு அல்லது மூன்று கண்ணீர் அஞ்சலி சுவரொட்டிகளையும், பதாகைகளையும் பார்க்க இயலும். அதில் பெரும்பாலும் இருபது வயதுக்கும் குறைவான இளைஞர்களின் படங்கள் இருக்கும். குறைந்தது அத்தனை சுவரொட்டிகளிலும் அந்த இளைஞர்கள் பவர்பைக்கு[3]கள் அருகில் நின்று அழகாய் சிரித்துக் கொண்டிருப்பார்கள். அந்த நினைவுகள் வந்து செல்வதற்கு முன்னே லூ மீண்டும் தொடர்ந்தார்.

[3] அதிக குதிரை சக்தி உள்ள இருசக்கர வாகனம்

சார், மேடம் சொன்னது மாதிரி அந்தப் பைக்கில வந்த இளைஞன் இறந்ததற்காக எங்களுக்குப் பெறும் வருத்தம் இருந்தது. ஆனால், அவர் அதிகமாகக் குடித்திருந்தார், அவரது தலைக் கவசம் அவரது பெட்ரோல் டேங்கின் மேல் இருந்தது, அதாவது அவர் தலைக் கவசம் அணியவில்லை, மேலும் கொண்டை ஊசி போன்ற வளைவில் இரண்டு வாகனங்களை வலப்புறமாக முந்திக் கொண்டு வந்து எதிர் திசையில் செல்லும் சாலையில் சென்ற எங்கள் வாகனத்தில் வந்து மோதினார், அதுவும் நாங்கள் சென்ற வாகனத்தின் ஓட்டுநர் வண்டியை முடிந்தவரை இடப்பக்கமாக திருப்பியதால் லேசாக உரசிச் சென்றது, அதி வேகமாக வந்தது என பல விபத்தை தருவிக்கக் கூடிய அத்தனையும் அவர் செய்திருந்தால் அந்த வருத்தம் கூட நிலை பெற்றிருக்கவில்லை. அதை விடக் கொடுமையான விசயம், அவர் அடிபட்டு ரோட்டில் கிடக்கையில் அவரது கைபேசிக்கு வந்த அழைப்பில் பேசியவனும் விசயம் தெரிந்த ஓரிரு நிமிடத்தில் அவ்விடத்திற்கு வந்து சேர்ந்தான் அதுவும் முழுப் போதையுடன். நல்ல வேளையாக ஆட்டோவில் வந்து சேர்ந்தான்.

“ஹி இஸ் ரைட்! சார்” இத்தனை தப்புகளையும் செஞ்சவனுக்காக நாம ஏன் கவலைப்படனும்னு, அந்த துயரச் சம்பவத்திலிருந்து வெளிவர முயற்சிக்கிறேன். ஆனால் அதனை நினைவிலிருந்து அழிக்க பல காலமாகுமென நினைக்கிறேன். மூச்சு விடாமல் சொல்லிக் கொண்டே தொடர்ந்தார் அந்த மேடம். எனக்கு வருத்தமெல்லாம், அவனோட மனைவி, குழந்தைகள், பெற்றோர் மேல தான் இருக்கு. அதுமட்டுமில்லாம சம்மந்தமே இல்லாம எதிர் திசையில் வண்டி ஓட்டி வந்த எங்க வண்டி ஓட்டுநர் மனைவிக்கு இப்போது தான் குழந்தை பிறந்திருக்கு, அவரோட நிலை, குடும்பத்தோட நிலை என்னவாகும் சொல்லுங்க?! பதினைஞ்சு வருசமா அவரு ஓட்டுநரா இருக்காறாம், ஆனா

இது தான் முதல் விபத்தாம். ரெம்ப வருத்தப்பட்டாரு, இனி வேற வேலைக்கும் போக முடியாதுனு புலம்பினாரு.

குருப்பா குடிக்கிறப்ப, குறைஞ்சது ஒருத்தராவது குடிக்காம இருந்தா பத்திரமா எல்லாரையும் வீடு கொண்டு போய்ச் சேர்க்கலாம். தங்களது பணியிடங்களில் இத்தகைய முறையே வழக்கத்திலுள்ளது என தம் வாழ்வியலையும் அந்த மேடம் சொன்னது எனக்கு தூக்கி வாரிப் போட்டது. அதிலிருந்து மீள்வதற்குள், லூ சொன்னார்.. குறைஞ்சது "கால்டாக்ஸி"யாவது முன் பதிவு செஞ்சிட்டுதான் குடிக்கனும்னு குண்டைத் தூக்கிப் போட்டார். இது ***குடிக்காமல் வாழ முடியாதுன்னு சொல்றவங்களுக்கு வேண்டுமென்றால் சரியான யோசனையாக இருக்கலாம், குடிக்காமல் வாழனும் என்பவர்களுக்கு சரியான யோசனையாக இருக்காது*** என யோசித்துக் கொண்டிருக்கையில். லூ தொடர்ந்தார், குறைஞ்சது குற்றாலத்தில் சுற்றுலா பயணிகளின் கூட்டம் அதிகமாக இருக்கும் காலங்களில் ஒரு 108 - மருத்துவ அவசரச் சேவை வாகனம் அங்கேயே நிறுத்தி இருக்க வேண்டும், அது சில உயிர்களை காக்க உதவும் என்றும் சொன்னார்.

நான் எந்த நியாயத்திற்கு செவி சாய்ப்பதென தெரியாமல் திகைத்தபடி நின்றிருந்தேன். ஆரம்பித்தவரே சொன்னார், சார் நல்ல வேளை நீங்க வரல. சொல்லி முடித்த உடனே கேட்டார், சார், பாபநாசம் போகிறோம் வர்றீங்களா? ஆறாந்தேதி, அத்ரி மலைக் கோயிலுக்குப் போகலாமா?

சென்னை போன்ற பெருநகரங்களில் மட்டுமல்ல, சுழல் சக்கரமாய் இயங்கும் பணம் சம்பாதிக்கும் இயந்திர வாழ்க்கையில் மாட்டிக் கொண்ட அனைவருமே விடுமுறையென அதிலிருந்து தப்பித்து வரும்

தருணங்களில் அத்தனை நிமிடங்களையும் முழுவதுமாய் வாழ்ந்து விடத் துடிப்பதில் தவறேதுமில்லை தான். ஆனால் அத்தகைய சுழல் சக்கரத்திலிருந்து முழு விடுமுறை எடுத்து விட்ட காரணத்தால் நான் நிதானமாக தற்போது வந்திருக்கும் முக்கியப் பணிக்கு முதலிடமளித்து பாபநாசத்தை இன்னொருமுறை வரும் போது பார்த்துக் கொள்வதாய் அவரிடம் பதிலளித்தேன்.




கடனா நதி அணைக்கு சென்ற போது கிட்டிய அனுபவத்தின் அடிப்படையில் அத்ரி மலைக் கோயிலுக்குச் செல்ல சிறப்பு அனுமதி பெற வேண்டும், அதாவது மாத வெள்ளிக் கிழமையிலும், அமாவாசை, பௌர்ணமி தினங்களிலும் மட்டுமே பொதுமக்கள் அப்பகுதிக்கு அனுமதிக்கப் படுகிறார்கள். அதுவும் "ஆதார் அட்டை[4]"யைக் காட்டி முன்பதிவு செய்து கொள்ள வேண்டும். இல்லை என்றால் வன இலாகவாவைச் சேர்ந்த அதிகாரிகள் அனுமதிப்பதில்லை. புலிகள் சரணாலயமான அந்தப் பகுதியில் அப்படி அனுமதி பெற்று குழுவாகவே செல்ல இயலும் என்பது பாதுகாப்பு முன்னெடுப்பு என்றாலும்,

[4] இந்திய ஒன்றிய குடிமக்களுக்கு அரசு வழங்கியுள்ள அடையாள அட்டை

எதற்கெடுத்தாலும் ஆதார் அட்டை எனும் அரசு; அந்த தகவல்கள் திருடப்படுவதும், கொள்ளயடிக்கப்பட்டு மக்கள் பணம் பெரும் முதலாளிகளால் சூரையாடப்படுவதும் அதை தடுத்து அரசு எக்கேள்வியும் கேட்காமல் இருப்பதும் ஏற்படுத்திய தாக்கத்தால், ஆதார் கேட்டால் நான் வரமாட்டேன் என்ற பதிலை வைத்து அந்த அறையை விட்டும் தற்காலிகமாக அந்த நிகழ்வின் தாக்கத்தையும் விட்டு வெளியேறலாமென நினைத்தேன். அதற்கு, முன்னே அவர்களிடம் இந்த நிகழ்வை ஒரு சிறு கதையாக்குவேன் என உறுதியளித்தேன்.

நான் எழுத்தாளன் என அறிமுகமானது, எனக்கு கதைக் கருவினை மட்டுமல்ல, யாருமறியா உலகையும், மக்கள் உள்ளத்தையும், உறவுகளையும், உணர்வுகளையும் கொண்டு வந்து சேர்த்து விடுகிறது. அது மாபெரும் வரமா? இல்லை சாபமா? என எனக்கு ஒரு போதும் புரியாது தான். இருந்தாலும் இதுவரை நான் தொடர்பில் இல்லை என்றாலும் என்னோடு உணர்வுகளால் உறவாகி இருப்போர்கள் வையகமெங்கும் பறந்து விரிந்திருக்கிறார்கள் என்பது மட்டும் சத்தியமே. அவர்கள் உள்ளத்து வார்த்தைகளை கோர்த்து படைப்புகளாக்கி விடுவதாலேயே அதுவும் சாத்தியமாகிறது என்றே நம்புகிறேன், அதே நினைவுகளுடன் அறையை விட்டு வெளியேற நினைத்த போது சில தகவல்களை மட்டும் அவர்களுடன் பகிர்ந்து கொள்ள என் மனம் துடித்தது.

இரண்டடிகள் பின்னோக்கி வைத்த நான், திரைப்படங்களில் கேப்டன் கூறுவது போல்… கடந்த 10 ஆண்டுகளாக ஆறு இலட்சத்திற்கும் அதிகமான நபர்களுக்கு புதிய ஓட்டுநர் உரிமத்தை தமிழக ஆர்.டி.ஓ, அலுவலகங்கள் வழங்குகிறது, அதே அளவு நபர்களுக்கு புதிப்பித்தலும் நடைபெறுகிறது. கடந்த மூன்று ஆண்டுகளில் அந்த எண்ணிக்கை ஒவ்வொரு ஆண்டும் பத்து இலட்சத்தை நெருங்கிக் கொண்டிருக்கிறது. இதில் குறைந்த

பட்சமாக வைத்தால் கூட 10% நபர்கள் வாகனங்களை ஓட்டிக் காண்பிக்காமலே ஓட்டுநர் உரிமம் பெற்றவர்களாக வைத்துக் கொண்டாலும் அதன் விளைவு என்னவாக இருக்கும்?

இதுவரை காவல்துறையில் பதிவான கணக்கெடுப்பில் உள்ள தகவலின் படி கடந்த பத்தாண்டுகளாக தமிழகத்தில் மட்டும் ஒவ்வொரு ஆண்டும் ஏறக்குறைய ஒரு இலட்சம் மக்கள் விபத்துக்களால் பாதிப்புக்குள்ளாகிறார்கள். மிகவும் முக்கியமாக அதில் 15% லிருந்து 20% மக்கள் உயிரிழக்கிறார்கள். இதில் கடந்த எட்டு ஆண்டுகளில் குறைந்தது ஒவ்வொரு ஆண்டும் **15,000** மக்கள் உயிரிழக்கிறார்கள். 130 கோடி மக்கள் தொகைக்கு இது ஒன்றுமில்லை என்று சொல்லி நம்மை நாமே தேற்றிக் கொள்ள இயலாது ஏனென்றால் இது வெறும் தமிழகத்தின் நிலை. விபத்துக்கான காரணங்களை பற்றி நிச்சயம் நான் ஒரு காணொளியை உருவாக்கித்தான் ஆக வேண்டும். பிறகு அதனை பகிர்ந்து கொள்கிறேன் என்று சொல்லி அங்கிருந்த நகர நினைக்கையில் என் நினைவுக்கு வந்தது. விபத்தில் இறந்தவர் குடித்திருந்தது, அதைப் பற்றி நான் விளக்கிச் சொல்ல விரும்பவில்லை என்றாலும் டாஸ்மாக் **31,243.57** கோடி ரூபாயிக்கு 2016-17 ஆம் ஆண்டில் மதுபானம் மற்றும் பீர் வகைகளை விற்பனை செய்து **26 ஆயிரம்** கோடிக்கு மேலாக நிகர வருமானத்தை ஈட்டி உள்ளது எனச் சொல்லி அங்கிருந்த நகர்ந்தேன்.

நான் கதையாய் எழுதுவதற்கான காலத்திற்காக காத்திருக்க நினைக்கலாம், நான் கதையாய் எழுதி அனுப்பும் வரை அந்நிகழ்விலிருந்தோர் பலரும் காத்திருக்கலாம். ஆனால் காலம் நான் எழுதுவதற்காக காத்திருப்பதில்லை என்பதே நிதர்சனம். விபத்தில் உயிரிழந்தவருக்கும், அந்த விபத்தால் பாதிக்கப்பட்டு மிகவும் மனம் நொந்து போயுள்ள அனைவருக்கும் சாந்தி விரைவில் வந்து சேரும் என்ற

நம்பிக்கையுடன்.. கதையாகிவிட்ட இந்த நிகழ்வை பின்வரும் தகவல்களுடன் நிறைவு செய்து என் பயணத்தை காலத்தின் கரம் பற்றி தொடர்கிறேன்.

**தமிழக ஆர்.டி.ஓ.வால் வழங்கப்பட்ட உரிமங்கள் (புதியது, புதிப்பித்தல்):**

கடந்த பத்து ஆண்டுகளாக ஆறு லட்சத்திற்கும் அதிகமான புதிய உரிமங்கள் வழங்கப்படுகின்றன. கடந்த மூன்று ஆண்டுகளாக அது பத்து இலட்சத்தை நெருங்கி விட்டது. உரிமத்தை பணம் கொடுத்து வாங்கியவர்கள் எத்தனை சதவிகிதம் இருப்பார்கள் என்பதனை நாம் யூகித்து அறிந்து கொள்வோம். உரிமம் இல்லாமல் ஊருக்குள் வாகனம் ஓட்டிக் கொண்டிருப்பவர்கள் எவ்வளவு பேர் இருப்பார்கள் என்பதனையும் அவ்வாறே அறிந்து கொள்வோம்.



## டாஸ்மாக் நிறுவனத்தின் நிகர வருமானம் (கோடிகளில்):

"கடந்த ஐந்து ஆண்டுகளாக 20 **ஆயிரம் கோடி**களுக்கு மேலாக உள்ளது" என்ற டாஸ்மாக் நிறுவனத்தின் நிகர வருமானம் நமக்குச் சொல்லும் செய்தி என்னவாக இருக்க முடியும் என்பதனை உங்களது யோசனைக்கே விட்டு விடுகிறேன். இந்தப் பணம் தமிழக அரசின் வருமானத்தில் மிக முக்கிய பங்கு வகிக்கிறது என்பதனை பலமுறை மந்திரிகளும் தமிழக அரசுப் பிரதிநிதிகளும் சொல்லி உள்ளார்கள். 2016-17ல் நிகர வருமானம் குறைந்துள்ளதாக நினைத்து மகிழ வேண்டாம் அந்தக் கால கட்டதில் 1,000 டாஸ்மாக் கடைகள் மூடப்பட்டதாக தமிழக அரசு கணக்குக் கொடுத்துள்ளது.



## தமிழகத்தில் விபத்துகளில் உயிரிழப்போர்:

கடந்த 25 ஆண்டுகளில் அரசின் அதிகாரப்பூர்வ அறிக்கைகளின்படி உள்ள தகவல்களின் அடிப்படையில் ஏற்பட்ட உயிரிழப்புகள் மற்றும் மொத்தமாக பாதிக்கப்பட்டோர் பற்றிய தகவல்கள். கடந்த பத்து ஆண்டுகளாக சராசரியாக குறைந்தது ஆண்டிற்கு 15 ஆயிரம் பேர் உயிரிழக்கிறார்கள் என்பது அத்தனை நல்ல செய்தியல்ல.




பாதிக்கப்பட்டோர் பட்டியலில் உயிரிழந்தோர், பேரிழப்புக்கு உள்ளானோர், சிறு காயங்களுடன் உயிர் தப்பி பிழைத்தோர் என அனைவரும் அடங்குவர். இந்த எண்ணிக்கை கடந்த 15 ஆண்டுகளாகவே 70 ஆயிரம் பேருக்கு மேலாக உள்ளது.



**கல்விக்கு உதவலாமே!**

அன்புடையீர்,

உங்கள் அனைவருக்கும் எனது இதயம் கனிந்த வணக்கங்களும் வாழ்த்துக்களும். தொடர்ந்து வாசித்து ஆதரவளித்து வருவதற்கு நன்றி.

இந்த வார்த்தைக் கோர்வைகள் உங்களுக்கு பிடித்திருந்தால்..

**உங்களிடம் ஒரு விண்ணப்பத்தை வைக்கிறேன், அது மிகவும் முக்கியமானது மற்றும் அவசியமானது. இன்றைய சூழலில் கல்வியின் அவசியத்தை நீங்கள் நன்கு அறிவீர்கள். தற்சமயம் இந்த வரிகளை நான் எழுதி முடிப்பதை சாத்தியப்படுத்தியதும், நீங்கள் வாசித்துக் கொண்டிருப்பதற்கும் அதுவே காரணம், அத்தகைய அடிப்படை பலன் அனைவருக்கும் கிடைத்திட வேண்டுமென நீங்கள் கருதினால்..**

- **குறைந்தது ஏதேனும் ஒரு அரசுப்பள்ளி மாணவனுக்கோ / மாணவிக்கோ அவர்கள் படிப்புக்கு ஏதேனும் ஒரு வகையில் உதவிடுங்கள்**
- **ஏதேனும் ஒரு ஏழை மாணவனுக்கோ / மாணவிக்கோ கல்லூரியில் படிக்க உதவிடுங்கள்**
- **உங்களுக்கு வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் அரசுப்பள்ளி மாணவ – மாணவியருக்கு ஏதேனும் ஒரு வகையில் வழிகாட்டிடுங்கள்**
- **அரசுப் பள்ளிகள் மேலும் சிறப்பாக செயல்பட எந்த வகையிலேனும் உதவிடுங்கள்**

மேற்கூறிய வேண்டுகோள்கள் நிறைவேற்றப்பட வேண்டியவை எனக் கருதினால் தொடர்ந்து பலரிடமும் இந்த வேண்டுகோளை நீங்களும் பகிர்ந்து கொள்ளுங்கள்!

படைப்புகள் பற்றிய உங்கள் கருத்துக்கள், விமர்சனங்கள் மற்றும் எண்ணங்கள் என்னை வந்து சேர இந்த மின்னஞ்சல் முகவரியை பயன்படுத்தவும்.

**karuveli.mahendran@gmail.com**

தங்கள் ஆதரவுக்கு மீண்டும் நன்றி!

*அன்புடன் | கருவெளி ராச.மகேந்திரன்*

## எனது படைப்புகள்:

**<u>இதுவரை :</u>**

*அமேசானில் கிடைக்கக்கூடிய தலைப்புகள்*

1. நாலு சொல்லில் - தொகுப்பு 1 (தமிழ் எழுத்துலகில் ஒரு புதிய முயற்சி)
2. நாலு சொல்லில் - தொகுப்பு 2 (தமிழ் எழுத்துலகில் ஒரு புதிய முயற்சி)
3. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 1 | கவிதைத் தொகுப்பு
4. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 2 | கவிதைத் தொகுப்பு

*இலவசமாக வெளியிடப்பட்டுள்ள தலைப்புகள்*

1. கண்களை மூடிப்பார் | கவிதைத் தொகுப்பு (தியானம் பற்றியது)
2. என் மரணம் - சிறுகதை | உண்மைச் சம்பவம்
3. மக்களாட்சியில் என் கடைசிப் பயணம் - சிறுகதை | உண்மைச் சம்பவம்
4. குற்றால வலி(ழி) - சிறுகதை | உண்மைச் சம்பவம்

*தற்போது எழுதிக் கொண்டிருப்பவை :*

1. மரணப் பிடியிலிருந்து - சிறுகதைகள்
2. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 3 | கவிதைத் தொகுப்பு - டிசம்பர் 2018
3. அவளோடு ஒரு பயணம் - கவிதைத் தொகுப்பு ( மீ டூ ) - சனவரி 2019
4. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 4 | கவிதைத் தொகுப்பு - பிப்ரவரி 2019

*ஒலிப் புத்தகங்கள் :*

1. நாலு சொல்லில் - ஒலிப் புத்தகம் பகுதி 1 - நவம்பர் 2018 (மறு வெளியீடு)
2. நாலு சொல்லில் - ஒலிப் புத்தகம் - டிசம்பர் 2018 (மறு வெளியீடு)

*காணொளிக் கவிதைகள் :*

1. நாலு சொல்லில் - முழுத் தொகுப்பு ( யூடியூப் சேனலில் உள்ளது)
2. நிலவும் நீயும் நானும் - தொகுப்பு 1 ( டிசம்பர் 2018)

*இசை வெளியீடுகள் :*

1. Where I am Going - ஏப்ரல் 2018
2. EDM 1.0 - ஜீன் 2018
3. So Easy - அக்டோபர் 2018
4. Protect Me - நவம்பர் 2018
5. The Inner Journey - Series - டிசம்பர் 2018

*2019 முதல், வாரம் ஒரு இசைக் கோர்வை வெளியிடத் திட்டமிடப்பட்டுள்ளது.*

## இணைந்திருக்க சில வழிகள் :

https://www.karuveli.wordpress.com | மின்னஞ்சல் : karuveli.mahendran@gmail.com

கைபேசி எண் : 94455 28556 | படைப்புகளை உங்கள் மின்னஞ்சலில் பெற்றிட ஒரு முறை பதிவு செய்து கொண்டால் போதுமானது. https://goo.gl/LC2dTD

## யூ- டியூப் சேனல்கள்:

கருவெளி : https://goo.gl/pSYy8Y

ஊமைகளின் குரல் : https://goo.gl/qXn34p

மீயுசிக்கா : https://goo.gl/v33JY9

## உதவிட விரும்பினால்:

நீங்கள் உதவ விரும்பியும் உங்களால் சரியான மாணவரையோ, பள்ளியையோ, தேவைப்படும் நபர்களையோ கண்டறிய இயலாமல் போனால் என்னைத் தொடர்பு கொள்ளவும். என்னால் இயன்றவரை என்னிடமுள்ள தகவல்களை பகிர்கிறேன்.

விலையின்றி அனைவரும் படிக்கவும் பகிரவும் வழிவகுக்கும் "கிரியேட்டிவ் காமன்ஸ்" உரிமம்" மூலமாக தொடர்ந்து பல படைப்புகளை வெளியிடும் இந்த முயற்சிக்காக நீங்கள் உங்கள் பங்களிப்பை செய்திட விரும்பினால்

| | |
|---|---|
| ICICI Bank<br>(நீங்கள் இந்தியாவில் வாழ்ந்தால்)<br><br>UPI மூலம் அனுப்ப விரும்பினால் | R. Mahendran<br>A/c no. 10400 150 1923,<br>Branch- Theni ICICI,<br>IFSC code: ICIC0006225,<br>Account type :Saving<br><br>UPI : karuveli@icici |
| PayPal<br>(உங்களிடம் இந்திய வங்கிக் கணக்கு இல்லை என்றாலோ, நீங்கள் அயல்நாட்டில் வாழ்ந்தாலோ) | https://www.paypal.me/karuveli |

*அன்புடனும் வாழ்த்துகளுடனும்*

*கருவெளி ராச. மகேந்திரன்*

## என்னைப் பற்றி

மேற்குத் தொடர்ச்சி மலையின் பிரமாண்டத்தை தினந்தோறும் இரசிக்க வாய்ப்பிருக்கும், இவ்வுயிர் அழிந்தால் ஐந்தாறு ஆண்டுகளில் மனித இனம் அழிந்து போகுமென்ற புகழ் பெற்ற உயிரின் பெயர் கொண்ட “தேனி”யில் வாழ்ந்து கொண்டிருக்கும் எனக்கு பெற்றோரால் வைக்கப்பட்ட பெயர் மகேந்திரன். எனக்கு விபரம் தெரிந்து, என் தேடல் துவங்கிய நாள் முதலாய் எனது எழுத்துகள் மூலம் நான் பதிவு செய்யத் துவங்கிய நாள் முதலாய் கரு = ஆதியானது, வெளி = எல்லையற்றது, என்ற இரு சொற்களை இணைத்து “கருவெளி” அத்துடன் என் பெற்றோர் பெயரின் முதல் எழுத்துக்களை இணைத்து “கருவெளி” ராச. மகேந்திரன் என்ற பெயரில் எழுதி வருகிறேன்.

ஏறக்குறைய 15 ஆண்டுகள் காற்றாலை நிறுவனங்களில் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தி துறை, செயல்திறன் கண்காணிப்பு மற்றும் மேலாண்மை துறைகளில், பல்வேறு மட்டங்களில் பணியாற்றி விட்டு தற்சமயம் முழு நேரம் எழுத்துப் பணியோடு, கிராமப்புற மாணவ மாணவியர், அரசுப்பள்ளி ஆசிரியப் பெருமக்களுக்கு என்னாலான அறிவுப்பகிர்வைச் செய்து கொண்டிருக்கிறேன்.

மிகச் சமீபத்தில் கற்றுக் கொண்ட ஒலி, ஒளி மற்றும் இசை சம்பந்தமான அறிவினை சமூகத்திற்கு பயனளிக்கும் வகையில் பல வடிவங்களில் கொண்டு வரும் முயற்சியை துவங்கி உள்ளேன். தற்சமயம் அதனை மக்களிடம் கொண்டு சேர்க்க, கவிதைகள் அனுபவப் பகிர்வுகளுக்காக “கருவெளி ராச.மகேந்திரன்”, பொது மக்களுக்குப் பயன்படும் அரசு மற்றும் அரசு சார் தகவல்களை பகிர்ந்திட “ஊமைகளின் குரல்” மற்றும் இசைக்காக “மியூசிக்கா” எனும் மூன்று யூடியூப் சேனல்களையும் ஆரம்பித்து தகவல்களை பரிமாறி வருகிறேன்.

மேலும் பல முயற்சிகளை சமூக பங்களிக்கும் வகையில் தொடர்ந்து செய்து கொண்டே இருப்பேன் என்ற நம்பிக்கையுடன் இயற்கையோடு என் வாழ்க்கை பயணம் தொடர்கிறது. உங்களைப் போலவே என்னைப் பற்றி நானும் அறிந்து கொள்ள நிறைய விசயங்கள் இருக்கின்றன. வாருங்கள் தொடர்ந்து பயணிப்போம்

*அன்புடன் - கருவெளி ராச.மகேந்திரன்*

**இக்கதையில் பயன்படுத்திய தகவல்களை பற்றி மேலும் அறிய:**

டாஸ்மாக் நிறுவனம் தொடர்பான தகவல்கள்

http://www.tasmac.co.in/annual_report.php

https://en.wikipedia.org/wiki/TASMAC

http://www.tasmac.co.in/forms/TASMAC_Annual_Report_2016-17_English.pdf

http://www.tasmac.co.in/forms/TASMAC_Annual_Report_2016-17_Tamil.pdf

விபத்து மற்றும் உயிரிழப்பு தொடர்பான தகவல்கள்

http://www.tn.gov.in/sta/ra1.pdf

http://www.tn.gov.in/sta/stat4.html

இடங்கள் குறித்த புகைப்படங்கள்

http://maps.google.com/

# நிகழ்களம்

கனவு - நினைவு - நிகழ்வு

இங்கு அத்தனையும் கற்பனையல்ல

“விடியலில் விழிப்போம்” என்று அனைவரும் நம்பலாம் அதற்கு எந்தத் தடையுமில்லை.
ஆனால் அந்த நம்பிக்கை அனைவருக்கும் உறுதி செய்யப்படுவதில்லை என்பதும் சத்தியமே



உங்களில் பலரைப் போல எனக்கும் “கலை” வடிவங்கள்
மிகவும் பிடித்தமானது.
அதிலும் கவிதைகள், கதைகள், ஓவியங்கள், இசை என்றால்
நேரம் போவதே தெரியாமல் அவைகளில் மூழ்கி இருப்பேன்.
படைப்பதென்றாலும், இரசிப்பதென்றாலும் அவ்வாறே.

என் பள்ளிப் பருவங்களில் சொல்லிய
அளவிற்கு என் கதைகளில் இப்போது
அத்தனை கற்பனை வளமில்லை என்பது
என் வருத்தம் என்றாலும் உண்மை
நிறைந்திருக்கிறதென்பது மிகவும் மகிழ்ச்சியையும்
உற்சாகத்தையும் நம்பிக்கையையும் தருகிறது.

“குற்றால வலி(ழி)” எனும் இந்தச் சிறுகதையும்
அத்தகைய உண்மைச் சம்பவத்தின் அடிப்படையில்
எழுதப்பட்டது தான். நீங்கள் எதிர்பாராத பல தகவல்கள்
இப்புத்தகத்தில் உங்களுக்கு கிடைக்கும் அதனை
உங்கள் வாழ்வுக்காக நீங்கள் பயன்படுத்திக் கொள்ளலாம்.
அந்த உறுதிமொழியுடன் இக்கதையை
அனைத்து ஜீவன்களுக்கும் சமர்ப்பிக்கிறேன்.

விரைவில் இன்னொரு படைப்புடன் சந்திக்கிறேன்..

*அன்புடன் | கருவெளி ராச.மகேந்திரன் | 94455 28556*

**கருவெளி கலையகம் வெளியீடு**